உ

கணபதிதுணை.

# மெய்யச்சிலேடைவெண்பா.



இவை

குன்றைக்குடியிலிருக்கும்

ம - கா - ஸ்ரீ - ஸ்ரீ திருவண்ணாமலையாதீன

மடத்து வாசல்

வித்வான்- புகழேந்திகுலதிலகராகிய வாணிதாச

வீரபத்திரக்கவிராயரவர்கள்பேரரும்,

முத்துச்சாமிக்கவிராயரவர்கள்

குமாரருமாகிய

**வீரபத்திரக்கவிராயரியற்றியது**

இஃது

நற்சாந்துபட்டி - என்று - வழங்குகிற

திருமலைசமுத்திரம்

**சி- மெ - கா - காடப்பசெட்டியாரவர்கள்**

குமாரர்

**முத்துராமஞ்செட்டியாரவர்களால்**

சென்னை:

மிமோரியல் அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.



துர்முகி௵ தை௴ 1௳

1897.

## சாற்றுகவிகள்.

—:o:—

இவை

காரைக்குடியிலிருக்கும்

மகா - ஸ்ரீ - ஸ்ரீ

மழவைச்சிதம்பரபாரதியாரவர்களியற்றியது.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

விரகமுனிவரச்செய்க ணையனங்கனைவெல்பவர்
மேவுமெயவெண்பாவைத்
தரகமுனிவருந் தடஞ்சூழ் குன்றை நகர்வீரபத்ரச்
சரசன்கூற.
வுரகமுனிதலைவிரிகோலமுமாகிவால்சுருட்டி
யொளித்தான்றுங்கக்
கரகமுனி பெருமலைவாயுடல் குறுகினு னென்றுங்
கழறற்பாற்றே.

இவை.

ம கா - ஸ்ரீ - ஸ்ரீ ஷெயார் குமாரர்

அஷ்டாவதானம்

மீனாட்சி சுந்தரமையர்வர்களியற்றியது.

வையச்சிலேடையமின்றிப்பதித்தற்குரியனவாய்
வடநூறென்னூன்
மெய்யச்சிலேடைமுன்வராதெனவேமறுகவினர்
விள்ளாதேக

வையச்சிலேடைமணமின்மால்கூர்வீரபத்ர
வாணிதாசன்
மெய்யச்சிலேடைவெண்பாவெண்பாவையுங்களிக்க
விளம்பினனே.

இவை

இராயபுரம்,

மகா - ஸ்ரீ - ஸ்ரீ மழவை - திருவிளையா
டற்சுப்பையரவர்கள்குமாரர்
இராமஸ்வாமிஐயரவர்களியற்றியது.

## வெண்பா

சித்திரமாமெய்யச்சிலேடைவெண்பாவீர
பத்திரப்பேரன்பன்பாடினு—னித்தியமு
மண்விண்புலவர்மருந்துமொழியென்று
ரெண்செவியின்னேறவே.

இவை

புதுக்கோட்டைச்சமஸ்தானம்
மகா-ஸ்ரீ-ஸ்ரீ
ஸ்கூல், இன்ஸ்பெக்டர் - உலகநாதபிள்ளையவர்கள்
இயற்றியது.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

வெண்பாவை வெண்பாவைவெண்பாவையெனக்கவி
ஞர் விளம்ப மெய்ய

வெண்பாவையடியிணையோரிசை கொளப்பாடகம்
பொருத்தி - வீட்டைநண்ண
வெண்பாவை கரும்பாவை யெனவழகுமிசைப்
பொருத்த முறவேமேன்மை
வெண்பாவைத்திருமங்கலஞ்சூட்டிவீரபத்ர
வேளீய்ந்தானே.

---

இவை
கானாடுகாத்தான்,
ம கா - ஸ்ரீ - ஸ்ரீ ஆனைஐயரவர்கள்
குமாரர்
பஞ்சாபகேசய்யரவர்கள் இயற்றியது.

**வெண்பா.**

சீர்வீரமெய்யச்சிலேடை வெண்பாக்குன்றைநகர்
சேர்வீரபத்ரகவிசெப்பவே - யோர்வனாயின்
கண்வருமானிடன்வேற் கண்மாமனும்புகழ்ந்தா
ரெண் மருமான்சொல்லென்னவே.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பூமலியுநறைமலியுஞ் சங்கமணித்தடமலியும்
பொதும்பர்சூழத்
தேமலியுந் திருமலைசமுத்திரம் வாழ்வணிகர்குல
திலகன்றெய்வக்
காமலியுங்கரமலியுமுத்துராமப்ரபல
கனவானிந்தப்
பாமலியுமெய்யச்சிலேடைவெண்பாவதனையச்
சிற்பதித்தான்மன்னோ.

---

சிவமயம்.

# மெய்யச்சிலேடைவெண்பா.

——:o:——

## காப்பு - வெண்பா.

திருவளருமெய்யச்சி லேடைவெண்பா வீசற்
கொருவருமுளன்பினுரைக்க - மருவுதுணை
யாகு கையானனத்த ஞர்பெற்றெடுத்திடுசே
யாகு கையானனத்தனும்.

இந்துதவழ் சத்தியகிரிசர்மீதிற் சிறந் த
சந்தச்சி லேடை வெண்பாச்சாற்றவே - நந்தனிரு
நானவிரவாகனத்த ஞவிலுறை வாணியிவ ர்
கானவிரவாகனத்தன்காப்பு.

### அவையடக்கம்.

சிற்றறிவினிற்சிறியேன்செப்பிடுமிப்புன்மொழியைக்
கற்றுணர்ந்தோர் முன்னங்கழறினேன் - முற்றுணரு
மான்றோ ரினீர்மையறிவிலர் குற்றம்பொருத் து
மீன்றோரினைதரிப்பரொன்று.

### நூல்.

பொன்னூர்மணிமாடம்பொன்னனையார்பூணொளிசெய்
மின்னுலிரவறியா மெய்யமே - பன்னுளஞ்

சத்துச்சித்தானந்தன்ருள்ளவத்தருள்பரம
சத்துச்சித்தானந்தன்சார்பு. (௧)

உளனமில்கந்தித்தாறுகுத்துவரால்வானூ ரு
மீனமினமென்றுதழூ உமெய்யமே - மோனவன்பர்
நம்பகமூன்றத் தன்னளினமலர்த்தாளருளூ
மம்பகமூன்றத்தன்னகம். (௨)

சாகரங்களென்றெயில்சூழ் தாழுகழிநீரருந்தி
மேகங்கள்சூற்கொள்ளுமெய்யமே - மாகருக்குச்
சாலத்துக்கந்தரத்தான்றண்ணரலே தந்தமணி
யாலத் துக்கந்தரத்தானுப்பு. (௩.)

பண்ணியமுங்கண்ணியமும் பாராட்டக்கேட்டமரர்
விண்ணியமு மேமறக்குமெய்யமே - நண்ணுமயிற்
சந்தனுக்கத்தன் கருமாலயற்கரி ய
சந்தனுக்கத்தன்கலப்பு. (௪)

காய்கதிரக்காந்தக்கலாரையுறக்காலுந் தி
மேய்மனியரண் போலாமெய்யமே - மாய்சீவ
போதத்தலையார் புரையறுத்தாட் கொண்டருளல்
வேதத்தலையார்விருப்பு. (௫)

மாதர்குழற் கூட்டகிற்றூமம்மயிற்சாயற்கஞ்சி
மீதிரா கோடுதனேர் மெய்யமே - சேத
மருவாசகத்தமிழான் மாவுயவன்பன்சொற்
றிருவாசகத்தமிழான் சேர்வு. (௬)

தாதளைந்து நீர்படிந்து சாளரநுழைந்து தென்றன்
மேதைநிலாமுற்றம் வருமெய்யமே - சீதமலி

கங்காதரச்சடையான் கன்மவினைக்குட்கிடந்து
மங்காதரச்சடையான்வாழ்வு. (எ)

மாதர்வரிக்கூந்தன்மதனரண்மீதேறவைத் த
மேதகு சோபானம் போன்மெய்யமே-கோதிலன்பி
ருயிற்படிகடந்தார் தாழொரன்பர்க்காப்பரவை [ன்
வாயிற்படிகடந்தார்வாழ்வு. (அ)

வான்மாரிகாட்டிவளர்க்குழுமெிற்குத்தே னை
மேன்மாறிநீட்டுபொழின்மெய்யமே—நான்மாய
வேணிக்கச்செட்டியிளைபாகாதாண்மது ரை
மாணிக்கச்செட்டிமனை. (கூ)

கேதனம்வெண்டுசேலைப்பக்கேழ்சிறகர்வீசிநப
மீதனங்கள்வந்தனபோன்மெய்யமே—போதுசிவ
தாசருக்குண்மையுடையான்சற்றுநலமில்லாவெம்
பாசருக்குண்மையுடையான்பற்று. (ய)

ஆயகருப்பஞ்சாறடும்புகையைக்காரென்று
மேயமயில்கூத்தாடுமெய்யமே—தீயகடா
மேனந்தத்தாண்டவத்தன்மேவாமார்க்கண்டனைமு
ருனந்தத்தாண்டவத்தன்சார்பு. [ன் (கக)

கோவொன்றெயின்மிசைசூழ்கூற்றிற்பொரும்பொதி
மேவும்பனைமுடிக்குமெய்யமே-காவுறைநீ [யே
காழிச்சம்பந்தர்கவிக்கருள்சம்பந்தர்
வாழிச்சம்பந்தர்மனை. (யஉ)

செஞ்சொலறநெறியோர்சேவிப்போர்யாரேனும்
வெஞ்சமணுணக்கடங்காமெய்யமே-நஞ்சுணவா

யாமையாவென்றானருள்வோன்முன்னோர்கண்மடி
யாமையாவென்றானகம். (௰௩)

வண்டார்களைப்பூவடுக்கும்வண்டார்களையேதடுக்கும்
விண்டொழுமாமிக்குயருமெய்யமே-தொண்டன்சே
யானவிருந்தானத்தனண்ணரும்பதந்தருபொன்
மானவிருந்தானத்தன்வாழ்வு. (௰௪)

ஐயமதுமாதரிடையையமதுப்பூவிடையாம்
வெய்யகுணமுங்கடக்குமெய்யமே-மெய்யதனி
லென்போதகத்தோலாரேத்தமுக்காலையருள்
வன்போதகத்தோலார்வாழ்வு. (௰௫)

தண்பனிமூடும்பிடியைதன்னினமென்றிந்திரனூர்
வெண்கரியும்வந்தணையுமெய்யமே-யொண்கமலப்
போதுக்கரமானார்புல்லென்வினையானகருந்
தாதுக்கரமானார்சார்பு. (௰௬)

காரினைமா லென்ன வராக் காசினியைக் கீண்டெழல்
வேரிமலர்க்காவோங்குமெய்யமே—கீரின [போல்
கரும்புவேம்பாகினார்கண்வலைப்பட்டார்க்கு
விரும்புவேம்பாகினாரில். (௰௭)

மாகவுவணம்புறவின்வண்பூவைக்கீழிருத்தன்
மேகநிறமாலுறல்போன்மெய்யமே—யாக
மிருணாலையத்தனிசைகானத்துக்காள்
கருணாலையத்தன்கலப்பு. (௰௮)

உபமானச்சிலேடை - விநாயகர்.

அருமுறச்செவியாலாகூர்தரும்வளத்தால்
வீரமருப்பேகனிகர்மெய்யமே—ஏருமையாந்

தாரத்துமேலானுர்தத்துவத்துள்ளாமாறு
தாரத்துமேலானுர்சார்பு. (௰௬)

சுப்பிரமணியர்.

ஆறுபாலங்குலவியம்மையிற்கண்மேலுறலால்
வீறுகதிர்வேலவன்போன்மெய்யமே—சீறுவினைச்
சொற்கந்தாய்நேர்வான்றொலேயேற்கிறங்கியரு
டற்கந்தாய்நேர்வான்றலம். (உ௰)

மகாவிஷ்ணு.

கோதண்டநற்கதையேகொள்சங்கம்வாள்வளையான்
மீதண்டநீளரிநேர்மெய்யமே—வாதண்டக்
கூப்பிட்டகோலத்தார்கூறும்வேதாவறியாச்
சேப்பிட்டகோலத்தார்சேர்வு. (உ௧)

கிஷ்ணமூர்த்தி.

ஆகுலத்தையோட்டுமணித்துவரையாண்டுமுறு
மேகநிறக்கண்ணனேர்மெய்யமே—மாகருய்யப்
பாறத்துவாக்கடந்தான்பற்றமிடற்றேதரித்த
வாறத்துவாக்கடந்தானுர்பு. (உ௨)

உமாதேவி.

மாச்சம்புபாலேமகிழவரைமேலுறலான்
மீச்சங்கரியைநிகர்மெய்யமே—கூச்சலிட்டார்
கூற்றைமுடியங்கிரியார்கூறுமதிதாதகிவா
ளுற்றைமுடியங்கிரியாரார்பு. (உ௩)

பிரமதேவர்.

வண்கலைமான்வாயுறலால்வார்குவலையந்தரலால்
வெண்கொளுமன்னத்தயனேர்மெய்யமே—யொண்

யடங்கப்பெருமானணிந்தானெனையாள் [கை
விடங்கப்பெருமான் விருப்பு. (உச)

திருமடந்தை.

மான்மனையென்றுருதலால்வண்கோகனசமுறை
மேன்மையாலுந்திருப்போன்மெய்யமே—வானிற்
படராசனத்தன்பணிலன்றூழ்மன்று
ணடராசனத்தனகர். (உரு)

நாமடந்தை.

தாதாவாயங்குறலாற்சந்தவளமெய்யொடுப்பூ
மீதுறலால்வாணிநிகர்மெய்யமே—நீதாந்
திருக்குண்டலத்தார்சிறியனையாளுகத்
திருக்குண்டலத்தார்சிலை. (உசா)

தேவேந்திரன்.

வெண்ணத் தியங்குறலான் மேன்மைக் கண்மேவுத
விண்ணுக்கிறைமானுமெய்யமே—யுண்ணப்ப[லால்
மாப்பணியாரத்தான்மகிழ்கயமுகற்பயந்த
பாப்பணியாரத்தான்பதி. (உஎ)

குபேரன்.

அத்தனருட்டோழமையாலங்கின்னரர்பதியாய்
மெய்த்தவளகேசன்போன்மெய்யமே—யத்தியத
டீரகழற்றாளன்றெவ்வர்பு ரஞ்சுட்டார்த்த
வீரக்கழற்றாளன்வெற்பு. (உஅ)

ஆதித்தபகவான்.

சேர்மையலையொதுக்குஞ்செய்யவனந்திகழும்
மேருவலஞ் சூழ்கதிர் போன் மெய்யமே—பாரளிப்
ஐராவணத்தானடிமுடிதேடற்கரிய [போன்
ஐராவணத்தானகம். (உகூ)

சந்திரபகவான்.

வானத்தமூரும்பன்மன்னரவைவாயுமலான்
மீனுக்கிறைமானுமெய்யமே—கான
மறைக்கோவணத்தார்வருநடுமூன்றோடு
தறைக்சோவணத்தார்தலம். (௩0)

சொற்சிலேடை.

ஞாலமகிழ்கானகத்துஞானியர்கடங்கருத்து
மேலாம்பிரமஞ்சார்மெய்யமே—சால
விடபச்கொடியார்விளங்கப்பொறிக்கும்
விடபக்கொடியார்விருப்பு. (௩க)

நாமவாளேறுழவர்நான்மறையோதந்தணர்கள்
வீமன்றனைப்பொருவுமெய்யமே—யீமூன்
றவளவடிவானரருஞ்சிரம்வைத்தோன்றாழ்
பவளவடிவானர்பதி. (௩உ)

தாடொழுமன்பர்க்குறவுந்தஞ்சம்புகுமவரும்
விடணனேர்காட்டுமெய்யமே—நாடகத்தின்
வீணசலத்தார்வெருவுஞ்சலத்தார்
சோணசலத்தார்தொடர்பு. (௩௩)

மாதவஞ்செய்சிலர்வழாவில்லறநெறியோர்
மேதையுடையோராவர்மெய்யமே—மாதர்தன

மண்ணுக்கிளியான்வருந்தாதெடுத்தாளென்
கண்ணுக்கினியான்கலப்பு. (ருச)

சோதிநகர்வர்னனையிற்றெருன்மறையோர்நன்னெறியில்
வேதனையுமேமாற்றுமெய்யமே—காதற்
றிருக்குவலயத்தார்திருக்குமைபங்காளா
திருக்குவலையத்தார்சிலை. (ருரு)

வாயுங்குலாசலத்தின்மாதர்கலப்பேழைகளில்
வேயுமணிகள் * பெறுமெய்யமே—மீயமருஞ்
சங்கத்தமிழ்ப்புலவர்சாற்றற்கருமதுரைச்
சங்கத்தமிழ்ப்புலவர்சார்பு. (ருசா)

தோணுஞாயத்தலத்துஞ்சொல்வள்ளியோரகத்தும்
வீணையிசையார்குலஞ்சூழ்மெய்யமே--நாண்முடிவி
னுமத்திநாட்டத்தானுவுலகழித்தவ்
வீமத்திநாட்டத்தானில். (ருஎ)

கண்டுவலஞ்சூழ்வோர்கனகமாடக்கொடிகள்
விண்டவழுமாற்றிவருமெய்யமே—மிண்டர்விடு
கம்பத்தரக்குரியார்கச்சுரகர்கைவாரி
சம்பத்தரக்குரியார்சார்பு. (ருஅ)

மன்னர்மணிமுடியும்வானிவர்மாடத்தொகையும்
மின்னனையாரந்திகழுமெய்யமே—பின்னுங்
கருமவிடையான்கலவாதருள்செய்
தருமவிடையான்றலம். (ருகூ)

ஏரைக்கொள்வேளாளரின்புயமுந்தண்பணையும்
வேரிக்குவளையணிமெய்யமே—போரைக்கொண்

---

* பெருகுமெய்யமே - என்றும்பாடம்.

முத்தலைவேற்கையன்முரண்வினையாற்போந்திச்ச
சுத்தலைவேற்கையன்கலப்பு. (சய)

தோலாநகருள்ளுஞ்சூழந்நகர்ப்புறமு
மேலாரையேதழுவுமெய்யமே—யேலாத
சண்டாளரைத்தான்றழான்மதியைத்தக்கன்மகக்
கண்டாளரைத்தான்கலப்பு. (சக)

கூறுமடவார்குழலுங்கோவேந்தர்கைவேலும்
வேறல்லுறக்காட்டுமெய்யமே—தூறுபவ
மாவிலங்கின்கோட்டத்தான்மாய்வேற்கருள்புரியுங்
கோவிலங்கின்கோட்டத்தான்குன்று. (சஉ)

அத்திரியிலும்மாதராரதரமுங்களமும்
வித்துருமஞ்சங்கொழிக்குமெய்யமே—நித்தன்
பிரணவாகாரன்பிறங்குமணிநாகா
பரணவாகாரன்பதி. (சங)

தத்தம்பதிதணந்தார்தாழமதன்றணவார்
மெத்தையம்பள்ளிவருமெய்யமே—சித்தமதிற்
சோட்புலிக்குவந்தார்குடோரியமுதின்படியீ
கோட்புலிக்குவந்தார்குடி. (சச)

செய்யநெறிச்சால்புளருஞ்சீற்றத்தைவாதுவரும்
வெய்யவழுவைக்கடக்குமெய்யமே - மையிவரு
மையிருதாலத்தாரணிக்கையறுத்தார்விதிக்கங்
கையிருதாலத்தார்கலப்பு. (சரு)

ஏற்கும்பழனவரம்பெங்குந்தவர்சடையு
மேற்கந்திவனநிகழ்மெய்யமே - மாற்கொளகத்

தென்னுமலைபாரிருவர்க்கழகுருவா
மண்ணுமலையாரகம். (சசு)

தெள்ளுநீரோடைவயற்செங்கமலமாதர்களம்
வெள்ளவனந்திகழுமெய்யமே - தள்ளரிய
வொற்கம்படித்தலைபானென்றுதாள்வாள்விசயன்
விற்கம்படித்தலையான்வீடு. (சஎ)

திண்ணநீர்சென்மதகுசெம்பொற்கொடித்துகில்கள்
விண்ணந்துடைத்தேகுமெய்யமே - கண்ணையருச்
சித்துச்சிரங்கன்றிருவாழிவேண்டவருள்
சித்துச்சீரங்கன்சிலை. (சஅ)

ஆந்தகையர்பேரறிவுமத்தாணிமண்டபமும்
வேந்தரவைமிக்காருமெய்யமே – கூந்தநந்து
மானக்கஞ்சாறர்வழுத்துங்கைமார்புசிர
மானக்கஞ்சாறர்மனை. (சகூ)

தாமமணிக்கோதையர்கட்டமிழ்த்தூக்கிற்கவிஞர்
மீமிசையின்சொல்லிசைக்குமெய்யமே-மாமதன்விற்
பூட்டம்பொறுத்தார்புரைபொறுத்தார்கூடலின்சட்
காட்டம்பொறுத்தார்கலப்பு. (ருo)

போதச்சங்கத்தும்புனத்தெயிற்றிமார்காத்து
மேதக்கவண்கலையார்மெய்யமே - தீதைக்கொள்
கற்பனைமாயத்தரையர்காணருமுகங்கொள்கருங்
கற்பனைமாயத்தரைபர்காப்பு. (ருக)

கோளறுதேவாலயமுங்கூறுமுத்தீவினையும்
வேள்விக்கினேசருறுமெய்யமே - நாளு

மொருவாப்புடையாருமையாண்மணாளர்
திருவாப்புடையார்சிலை. (ரு௨)

சந்தாடவிவளையுஞ் சங்கமணித்திரளும்
விந்தமலேயங்கடுக்குமெய்யமே - யந்தனடிக்
கஞ்சிப்பதியாரகந்தவிருமாபதியார்
கஞ்சிப்பதியார்கலப்பு. (ருங)

பல்லவப்பூங்காவும்பணிதிசெய்பொற்சொல்லர்களும்
வில்வங்கந்தங்கமுறுமெய்யமே - வல்லமையாம்
போர்க்கும்பிநாகத்தார்போமுரியினாகத்தார்
ரார்க்கும்பிநாகத்தாரார்பு. (ருச)

காழ்படுமெத்தொன்மரமுங்காயுஞ்செருக்களமும்
விழ்செனிக்கவந்தமிகுமெய்யமே - வாழன்பர்க்
காசடாதீர்த்தத்தாரம்புயத்தாட்கீழ்ப்படுத்து
மாசடாதீர்த்தத்தார்வாழ்வு. (ருரு)

சேயிழையாருச்குஞ்சிவாலயஞ்செலன்பருக்கு
மேயவரங்கண்ணிலவுமெய்யமே - யாயுமறை
மூலத்தந்தத்தார்முரணுலகைமேற்கொண்மணிக்
கோலத்தந்தத்தார்குடி, (ரு௬)

துய்ப்போர்க்கரும்பொருளுந்துன்னலர்பால்வீரர்க
மெய்க்கவசஞ்சார்ந்துவருமெய்யமே - யுய்க்குங் [ரு
கருடக்குதிரையான்கஞ்சனறுதிக்கே
யருடக்குதிரையானார்பு. (ரு௭)

கற்பவருமாதர்றுதற்கண்டோளிணைமருங்குல்
விற்பனவிவேகமுறுமெய்யமே - மும்பரசு

நாவேதப்பாதுகையானுண்மலர்தூயன்பர்தொழு
மாவேதப்பாதுகையான்வைப்பு. (௫௮)

நூற்கேள்விவல்லவருநோய்தவிர்க்குநூலினரு
மேற்கோளெடுத்துரைக்குமெய்யமே - மாற்கூர்
மடங்கழியாருள்ளார்மனத்தடையாரன்பி
னிடங்கழியாருள்ளாரிடம். (௫௯)

மேகந்தவழ்வரையின்வெங்காலின்மாநடையில்
வேகந்தணைமருவுமெய்யமே - யாகும்விதிக்
யஞ்சுதலைக்கொன்றாருந்தலைகொய்தாரெனக்கூழ்க்
கஞ்சுதலைக்கொன்றாரகம். (௬௰)

மக்களெனவிண்ணோருமன்னுதெய்வங்களுஞ்சென்
மிக்கவரவங்கடுக்குமெய்யமே—தொக்கதனிற்
பாண்டரங்கனந்தன்பனுவற்களங்குழலாட்
பாண்டரங்கனந்தன்பதி. (௬௧)

அஞ்சிலர்பாற்கொற்றவருமாராமமுமாரன்
வெஞ்சினமாவிற்காட்டுமெய்யமே—பஞ்சவன
வைச்சம்புமாக்குவித்தான்மாலினைச்சேவாகவுமு
கைச்சம்புமாக்குவித்தான்காப்பு. (௬௨)

ஆனமகார்பாலனைமாராடனங்கிற்கூத்தியர்கண்
மேனகையினாட்டஞ்செய்மெய்யமே—ஞானபதஞ்
சண்டேசுரரத்தன்றாளரியத்தந்தருண்மெய்க்
கண்டேசுரரத்தன்காப்பு. (௬௩)

தேம்பொழிற்குமன்பிற்றிகழ்வோர்விநாயகர்க்கும்
வேம்பணியாரம்படைப்பார்மெய்யமே—கூம்பத்

தருவாலவாயார்தவர்க்குமறைவாயார்
திருவாலவாயார்சிலே. (௬௪)

சாக்காடருந்தவருந்தாமரைக்கட்பேடுமெகின்
வீக்குஞ்சடைகாட்டுமெய்யமே—யூக்கத்
திரிபுரமாரணத்தார்செய்யகமலத்தாட்
பரிபுரமாரணத்தார்பற்று. (௬௫)

தாளாண்மைநீள்புலமுஞ்சாறுமறுகெவ்விடமும்
வேளாளரேர்வளஞ்சான்மெய்யமே—யாளான
அப்பரையின்றுதன்னரும்புசழ்பாடப்பணித்த
அப்பரையின்றுதன்னகம். (௬௬)

தேறுமியோகியர்க்குஞ்செய்வதுவைமண்டபத்தும்
வீறினியமம்பரமார்மெய்யமே—யேறுபவத்
திமத்தவேணியினன்சிக்குறுமுத்திதரு
மமத்தவேணியினனார் (௬௭)

வன்றிறலோர்போர்முனையின்மாற்றலரைத்தூணிக
வென்றலமுந்தோன்றவிடுமெய்யமே-மன்றிற்சி [லா
ராட்டிற்களித்தார்அருட்கதியானுயரிசைப்
பாட்டிற்களித்தார்பதி. (௬௮)

தக்கோரும்புக்கார்தமைச்சமனுமேமரண
விக்கினந்தடுக்கவருமெய்யமே—பக்கமிடுங்
குங்குலியக்கலையர்கொள்கைக்கருள்வேணி
மங்குலியக்கலையர்வாழ்வு. (௬௯)

மல்லனீர்ப்பந்தருற்றூர்மாவயவரைப்பொருந்தார்
வெல்லப்பயமுட்கொண்மெய்யமே—சொல்லரிய

தானுவனப்பொருத்தன் றண்ணகுமுத்தங்கொழிக்கு
வேணுவனப்பொருத்தன் வெற்பு. [ம்(எ௰)

ஊட்டுஞ்சுதைமாடவுன்னதத்துந் தூர்த்தருக்கு
மேட்டிமையங்காட்டுமெய்யமே—வேட்டுடலின்
வாமியத்தியைத்தொலைத்தார்மார்பரரிக்குச்கால
நேமியத்தியைத்தொலைத்தார்நேர்பு. (எக)

கேட்டசம்பந்தியருங்கிரமொழியார்தனமும்
வேட்டலைமுடிக்கவருமெய்யமே—சூட்டரவா
மையோடணியகலன்வாஞ்சையிற்கொண்டுற்றதகை
மையோடணியகலன்வாழ்வு. (எ௨)

ஒத்தமுகிற்குந்தாதாவுக்குமள்ளர்நெல்வயற்கும்
வித்தியாசம்போக்குமெய்யமே—பத்திவிளக்
கேற்றுகணம்புல்லாரினியாரிடும்பரகந்
தோற்றுகணம்புல்லார்தொடர்பு. (எ௩)

அன்பார்பொழிற்புறத்து மஞ்சுகங்கொள் பஞ்சரத்
மென்பால்வளஞ்செறியுமெய்யமே—தன்பாலின் [து
வந்தநியேதந்தான்வழுத்துமரிச்சந்திரற்கோர்
சந்ததியேதந்தான்றலம். (எ௪)

போர்பயில்வோர்க்காரியரும் போந்ததகர்ச் சண்டை
வீரரசமோதுவிக்குமெய்யமே—ஆரமலர் [யினும்
சங்கக்கனக்குழையான்சாற்றும்வில்வக்குழையான்
சங்கக்கனக்குழையான்சார்பு. (எ௫)

மன்னுமலர்க்காமிசையுமாதர்முகமிசையு
மின்மழைக்கணஞ்சரிக்குமெய்யமே—நன்மைபெற

வாயிலாரானுர்வழுத்தற்கருளெனுளக்
கோயிலராரானுர்குடி. (எசு)

கோலத்தடவனசங்கோதையர்கண் கிர்குயங்கள்
வேலைக்கண்மாக்கனியார்மெய்யமே—சீலத்தார்
சேவிக்குமாலானுர்தென்மதுரையாய்ச்சிதரு
மாவிச்குமாலானுர் ஆர்பு. (எஎ)

கோழரைவேய்க்கொம்பகவக் கோடரங்கள் செய்கள்
வேழம்பராலையுறுமெய்யமே—யூழ்வினையாற் [பல
கூமருமமுக்கையான்கொண்டுபிறவாதளிச்குங்
காமருமமுக்கையான்காப்பு. (எஅ)

சித்தசுத்தியைப்பெறு வோர்தெவ்வர் திறைமன்னர்
வித்தமனகம்பொருவுமெய்யமே—பித்தர் [முன்றில்
மலைக்குமரியார்மணக்குமரியார்
மலைக்குமரியார்மனை. (எகூ)

இந்துதவழ்தண்டலையிலேறுழவர்திண்புயத்தில்
விந்தைக்கனிமகிழ்சான்மெய்யமே—பந்தவினை
யாசனந்தந்தாண்டாராருஞ்சுந்தரர்க்கடிமைச்
சாசனந்தந்தாண்டார்தலம். (அ0)

தண்பதுமனுவகமுஞ்சார்கவிஞர்நாவகமும்
வெண்பாவையுநிகழுமெய்யமே—தண்பரவை
யின்மிதவையாக்கையரெண்ணருஞ்சீரப்பருக்குக்
கன்மிதவையாக்கையர்காப்பு. (அக)

புக்குமணிக்கோபுரமும்புண்ணியருநீண்மறுகு
மிக்கவிரதங்குலவுமெய்யமே—யக்கதிர்க்குத்

தக்கனியாகத்தார் தரும்பலுகுத்தார்மலேத்த
வக்கனியாகத்தார்மனே. (அஉ)

வாட்டனுப்போரிற்றெவரைமன்னர்முன்னுச்சிரமர்
வீட்டுமனுச்கும்பொருவுமெய்யமே—யாட்டுவினே
யேதத்தலேவன்னிழுதையனேயேதடுத்தாள்
பூதத்தலேவன்பொருப்பு. (அங)

ஓவியச்சிங்கத்தினேநோக்கும்பலுமீனுடையிலு
மேவிப்பயந்திரியுமெய்யமே—பூவின்மீ
தென்றிருக்கையோட்டினுரெம்மான்மழுமானுர்
மின்றிருக்கையோட்டினுர்வெற்பு. (அச)

ஆரமரின்முன்னிட்டவிங்தோர்வடமாதர்
வீரசுவர்க்கத்தலத்தார்மெய்யமே - சீருடலிற்
போர்ப்பதிபங்கெடுத்தார்போர்வையெனக்கொண்
பார்ப்பதிபங்கெடுத்தார்பற்று. [டொருபாற்(அரு)

தாண்டாவருவினேயிற்றக்கோருமஞ்சேற்றும்
வேண்டாமைகண்டுஞ்சுமெய்யமே - நீண்டாருஞ்
சேஷகுணத்தார்சிலேத்தவர்க்குச்சத்துவவி
சேஷகுணத்தார்சிலே. (அசு)

ஏவார்விழிவலேவிட்டேகணிகைமாரரசர்
மேவாராயுமடக்குமெய்யமே -யோவாமெய்
நீற்றுவருக்கத்தர்கிசழ்த்தவடிமுடிகொள்
கூற்றுவருக்கத்தர்குடி. (அஎ)

சிறிமடலேச்செழுந்தெங்கிற்றேங்காவில்
வீறுவணநாகமென்றூர்மெய்யமே - பேறுகணுற்

சிதக்கால்வையத்தன் றியச்செய்தம்மைமுன்சீர்
வாதக்கால்வையத்தன்வாழ்வு. (அஅ)

ஏரிலங்குசூரர்களுமெல்லேக்குட்காப்பினையும்
வீரியங்கண்மேவவைகுமெய்யமே - யாரல்
விழிக்கஞ்சியாண்டான்விமலன்மதுரைப்
பழிக்கஞ்சியாண்டான்பதி. (அகூ)

நீடிளைஞர்தம்மழகினெய்த்தோர்குறிஞ்சியினில்
வேடரம்பின்னருமெய்யமே - கூடலமர்
பத்திக்குவித்தார்பனிக்காவொர்சித்தனைமுன்
கொத்திக்குவித்தார்குடி. (கூ0)

நத்தார்வயற்களினுநற்கவிஞர்பாங்கருஞ்சொல்
வித்தாரமோடுநிசழ்மெய்யமே - பத்தர்
மெயிலாயவோங்கல்லார்மேவாப்பேரின்பக்
கயிலாயவோங்கலார்காப்பு. (கூக)

மாவயவர்போர்முனையின்மல்லினைநல்லார்முறிவைய
மேவலருடன்றொடுக்குமெய்யமே - தாவிலரு
ளையக்கரமனுவானுளக்கறங்குடுக்கி
சையக்கரமனுவான்சார்பு. (கூஉ)

ஓதுந்தளிகடொறுமுற்றவயோதிகரும்
வேதண்டமங்கையமர்மெய்யமே—மூதண்
பொதிகாசலமுனியார்போதகருவீணர்க்
குதிகாசலமுனியாரூர். (கூங)

பம்புசிவயோகியரும்பண்டிதமேசெய்பவரும்
வெம்பவநோயைக்கடத்துமெய்யமே - சிம்புளாந

மாறிநரகேசரியார்மாறுடைத்தார்பாதகர்க்கன்
பூறிநரகேசரியாரூர். (கூச)

திண்ணிவுளிமேதஞ்செய்சிலருமுண்முண்டகத்தும்
விண்ணுளமேற்படருமெய்யமே - தெண்ணீர்
வளைக்கக்குழைவார்வளைமலைமின்னுகந்
திளைக்கக்குழைவார்சிலை. (கூரு)

கொஞ்சுமகச்சாலையினுங்கூர்மாடத்தும்பரினும்
விஞ்சையரிருக்கைநிகழ்மெய்யமே - கஞ்சனரு
டிக்கம்பரவீடான்செப்பருமன்பர்க்கருளா
திக்கம்பரவீடான்சேர்வு. (கூசு)

ஆதியாராதனைக்குமாடவர்ப்பிரிந்தவர்க்கும்
வேதாவலவனுறுமெய்யமே - மீதார்
சிரசிதவம்பலவன்சேரும்மதுரை
யிரசிதவம்பலவனில். (கூஎ)

மட்டவிழ்காவிற்கடைஞர்வள்ளத்திடைக்குலத்து
விட்டுனுமதங்குலவுமெய்யமே - துட்டமத
வேடன்செருப்புதையார்மெய்யறிவிற்றோன்றுமொரு
வேடன்செருப்புதையார்வீடு. (கூஅ)

பங்கையக்கைக்கோதையர்க்கும்பாகரடக்குதற்கும்
வெங்களபத்தங்குசமார்மெய்யமே - சங்கையறு
நாமவுருத்திரனார்நண்ணுமறிவைக்கடந்த
வீமவுருத்திரனாரில். (கூகூ)

நூலோருணர்வினருநுண்ணறிவிற்சோதிடரும்
மேலோரையேகணிப்பார்மெய்யமே - பாலேறு
மானதினகரனாரயினெனவந்தாண்ட
ஞானதினகரனார்நாடு. (௩)

மெய்யச்சிலேடைவெண்பா

முற்றிற்று.

---